# 15

# விதி

"அம்மா, எனக்கு முட்டைத் தோசை வேணும்..."

"எனக்கும்மா..."

கணவனிடமிருந்து வந்திருந்த லெட்டரை சுவாரஸ்யத்துடன் படித்துக்கொண்டிருந்த புஷ்பாவின் கைகளை ஆளுக்கொரு பக்கமாய் பிடித்து உலுக்கினர் ஷண்முகமும் அவன் தம்பி முருகனும்.

"அம்மா!" லெட்டரிலிருந்து கவனத்தைத் திருப்பத் தாயின் முகவாயில் கையைக் கொடுத்துத் தன் பக்கம் திருப்பினான் ஏழு வயசு ஷண்முகம்.

"என்னப்பா? அப்பாகிட்டேயிருந்து வந்திருக்கற கடிதாசியைப் படிக்க உடாம தொந்தரவு பண்றீங்க..."

சற்றுத் தொலைவில், சுவாமி மாடத்திற்கு அருகில், அன்றுதான் அறுவடையாகி வந்த நெல் கதிர்களுக்குப் படையலை முடித்து எழுந்த கனகம்மாள்—புஷ்பாவின் தாய்—"என்னடா ராசா, அம்மாவைத் தொணதொணக்கறீங்க?" என்று வினவவும், பையன்கள் அம்மாவை விட்டுவிட்டு பாட்டியிடம் போனார்கள்.

"எனக்கு ஆம்லெட் வேணும் பாட்டி..." என்றான் ஷண்முகம்.

"எனக்கும்" என்றான் முருகன் தொடர்ந்து.

"ஆத்தாடி! முட்டைத் தோசையா? இன்னேரத்திலா? வடை பாயசத்தோட சமையல் ஆயிருக்கு...அதைச் சாப்பிடாம முட்டைத் தோசை எதுக்குடா கண்ணு?"

"இல்லே பாட்டி எனக்கு முட்டைத் தோசைதான் வேணும்..." ஷண்முகம் சிணுங்கவே, முருகனும் சேர்ந்துகொண்டான்.

இந்த கலாட்டாவில் புஷ்பாவினால் கணவனின் கடிதத்தைத் தொடர்ந்து படிக்க இயலவில்லை.

“ஒதை வேணுமாடா பசங்களா? இன்னிக்குப் படையல்... தாத்தா இதோ வந்துடுவாரு...சமத்தா அவரோட சாப்பாடு சாப்பிடாம இதென்னடா அடம்?”

தாயை லட்சியம் செய்யவில்லை பையன்கள்.

“பாட்டி...பாட்டி...முட்டைத் தோசை பாட்டி...நேத்துக்கூட வெள்ளிக்கிழமைனு முட்டை போட மாட்டேன்னுட்டீங்க...” ஷண்முகம் கெஞ்சினான்.

பாட்டிக்கு மனசு இளகிவிட்டது.

“எதையாவது சாப்பிட்டு வயிறு ரொம்பினா சரி...” என்றவள் சமையற்கட்டைப் பார்த்து, “செல்வி...செல்வி...” என்று அழைக்கவும், பதினைந்து வயசுப் பெண் ஒருத்தி “என்னங்க?” என்று எட்டிப் பார்த்தாள்.

“இதுங்களுக்கு முட்டைத் தோசை வேணுமாம். கொஞ்சம் வெங்காயம் அரிஞ்சு, பச்சை மொளகா தாளிச்சு ஆளுக்கொரு தோசை போட்டுக் கொடேன்...”

“முட்டை இல்லீங்க. தோட்டத்திலேருந்து இன்னும் எடுக்கலை...” ஈரமாயிருந்த கையைப் பாவாடையில் துடைத்த வண்ணம் செல்வி பேசினாள்.

“இன்னுமா முட்டை எடுக்கலை? அந்த முனியன் எங்கே? அவனை உட்டு தோட்டத்துலேருந்து எடுத்தாரச் சொல்லு.”

“முனியன் பெரியய்யாவோட வயலுக்குப் போனவன் இன்னும் வரலீங்க. காலையிலே ஒரு நடை கதிரைக் கொணாந்து வச்சிட்டுப் போனவன்தான்...”

அன்றைக்கு அவர்கள் நிலத்தில் அறுவடை. முதல் கதிர்கள் வீட்டுக்குக் கொண்டுவரப்பட்டதும் படையல், பூஜை எல்லாம் அமர்க்களப்படும். வீட்டு ஆட்களெல்லாம்கூட வயலுக்கு உதவி செய்யப் போயிருந்தார்கள்.

“ஆளுங்க இல்லடா கண்ணு...பொறவு சாயங்காலமா போட்டுத் தரச் சொல்லறேன். என் தங்கமில்லே, சொன்னாக் கேப்பீங்களாம்...” கனகாம்பாள் தாஜா செய்ய முனைந்தாள்.

"இல்லே...இப்பதான் வேணும். இப்பவே..." பையன்கள் மசிவதாகத் தெரியவில்லை.

புஷ்பாவுக்குக் கோபம் மூண்டது.

"என்னடா அழுகை? எழுந்து வந்து ஆளுக்கொண்ணு முதுகுலே வைக்கட்டுமா? போனாப் போகுதுனு பார்த்தா ரொம்பதான் ஜாஸ்தியாகுது!" கையிலிருந்த கடிதத்தை நாற்காலி மேல் வைத்துவிட்டு அவள் எழுந்ததும் கனகம் மகளைத் தடுத்தாள்.

"சின்னக் கொழந்தைங்களுக்கு சரியா நீ என்னம்மா? சும்மா இரு" என்று புஷ்பாவை அதட்டிவிட்டு, "நீதான் போயி ரெண்டு முட்டை எடுத்தாயேன்...போ" என்றாள் செல்வியை நோக்கி.

"நா எடுத்துட்டு வரேன் பாட்டி. எனக்கு எடுக்கத் தெரியும். நெதம் முனியனோட நாந்தானே எடுக்கப் போறேன்!" ஷண்முகம் உற்சாகமாய்ப் புறப்படவும், "எனக்கும் எடுக்கத்தெரியும், நானும், நானும்..." என்றபடி முருகனும் கிளம்பினான்.

"சரி, போங்க. செல்வி, நீ கூடப் போ. ரெண்டு முட்டை மட்டும் எடுத்திட்டு வந்திடுங்க. முனியன் போய் பாக்கி எடுக்கட்டும்."

"ரெண்டு இல்லை, நாலு. எனக்கு ரெண்டு, தம்பிக்கு ரெண்டு..." கத்திக்கொண்டே ஷண்முகம் புழக்கடைப் பக்கம் ஓடினான்.

பின்கட்டைத் தாண்டியதும், "நீ வாணாம், எனக்கு எடுக்கத் தெரியும்" என்று செல்வியை அவன் தடுத்து விடவே, அடுப்பில் பாதி வடை சுட்டு எண்ணை காய்ந்திருந்ததால் அவளும் நின்று விட்டாள்.

தம்பி பின்தொடர பின்கட்டைத் தாண்டி, புழக்கடைப் படியில் இறங்கி தோட்டத்துக்கு ஓடினான் ஷண்முகம்.

உற்சாகமாய் ஓடும் குழந்தைகளைப் பார்த்தாள் புஷ்பா.

பம்பாயில் சாதுவாய் இருக்கும் பசங்கள் இங்கு என்ன வால்தனம் பண்ணுகின்றன? தாத்தாவும், பாட்டியும் தங்கள் கைகளில் என்று புரிந்துபோய் என்னமாய் லூட்டி அடிக் கின்றன?

"நீ ரொம்ப எடம் கொடுக்கறேம்மா. சாப்பாட்டு நேரத்துல ஆம்லெட்டா? ரெண்டும் என்ன ஆட்டம் போடுதுங்க பாரு..."

"ஆமா பெரிய எடம்! சரி, பம்பாய்ல ஒண்டுக் குடுத்தனமும், பள்ளிக்கூடமுமா வாழற புள்ளைங்க இங்க கொஞ்சம் ஆடிப் பாட உட்டா என்ன தப்பு? உடம்புகூடக் கொஞ்சம் தேறியிருக்கு துங்க...இங்க அதுங்களுக்கு இல்லாத உரிமை யாருக்கு?"

அம்மாவோடு பேசிப் பயனில்லை என்று உணர்ந்த புஷ்பா சிரித்துக்கொண்டே கணவனின் கடிதத்தை மீண்டும் ஒரு முறை படிக்கத் தொடங்கினாள்.

அவள் கணவன் புருஷோத்தமனுக்கு பம்பாயில் ஒரு தனியார் நிறுவனத்தில் வேலை. அடிக்கடி ஊர்ப்பக்கம் வர முடியாவிட்டாலும் இரண்டு வருஷங்களுக்கு ஒரு முறை லீவு கிடைக்கும்போதெல்லாம் குழந்தைகளுடன் புஷ்பா கிராமத்துக்கு வந்து விடுவாள். பம்பாயிலிருந்து சென்னைக்கு வந்து, அங்கிருந்து விழுப்புரத்திற்கு வந்து, அங்கிருந்து பஸ்ஸில் அவள் கிராமத்தை வந்தடைவதற்குள் அவளுக்குப் போதும்போதும் என்றாகிவிடும். ஆனால் பம்பாயில் கிடைக்காத சுதந்திரத்தையும் செழுமையான வாழ்க்கையையும் குழந்தைகள் அனுபவிப்பதைப் பார்க்கும்போது பிரயாண அலுப்பு ஓடிவிடும்.

தாத்தா பாட்டிக்குப் பேரன்கள் ஏக செல்லம்.

இளநீர், கரும்பு, பச்சைக்கடலை என்று தினம் ஒரு வண்டி நிறைய சாமான்களைத் தாத்தாவும், புட்டு, இடியாப்பம், தேங்காய்ப் பால் ஆப்பம், முறுக்கு, அதிரசம் என்று பாட்டியும் வகை வகையாய் சாய்த்துத் தள்ளிவிடுவார்கள்.

விடிகாலையில் எழுந்து வீட்டில் கறக்கும் பாலைக் குடித்து விட்டு வாய்க்காலுக்கோ, இல்லை பம்பு செட்டுக் கொட்டகைக்கோ போய் ஆனந்தமாய்க் குளித்து லூட்டி அடிப்பார்கள் ஷண்முகமும் முருகனும். கிராமத்திற்கு வந்த இந்த ஒரு மாதத்தில் வெயிலில் சுற்றியதால் உடம்பு கறுத்துப் போனாலும், ஒரு பருமன், ஒரு பளபளப்புக் கூடி குழந்தைகள் பார்க்கவே திடகாத்திரமாய் இருப்பது என்னவோ நிஜம்தான்.

பம்பாயில் செய்ய முடியாததை எல்லாம் இங்கு செய்து பார்க்கப் பையன்கள் துடிப்பார்கள்.

மரத்தில் ஏறுவார்கள். மாங்காய், தேங்காய் பறிப்பார்கள். பின்னாலிருக்கும் கோழிக்கூண்டிலிருந்து தோட்டக்காரனுக்குச் சரியாய் முட்டை எடுப்பார்கள். இப்படி...

இப்போதுகூட ஆம்லெட் மேல் உள்ள ஈடுபாடால் அல்லாமல், 'ஆள் இல்லை; நாமே போய் முட்டை எடுக்கலாம்' என்ற ஆசையினாலேயே முட்டைத் தோசை அவர்கள் கேட்டிருக் கிறார்கள் என்பது புஷ்பாவுக்குப் புரிந்ததால் லெட்டரைக் கையில் எடுத்தவளுக்குப் புன்னகை எழுந்தது.

லெட்டரை மறுபடியும் படித்தாள் புஷ்பா.

'நீ இல்லாமல் பொழுது போகவில்லை. பையன்கள் இல்லாமல் ஒன்றுமே பிடிக்கவில்லை' என்று எழுதியிருந்த புருஷோத்தமன், தனக்கு லீவு சாங்ஷன் ஆகிவிட்டதாகவும், சனிக் கிழமை கிளம்பி திங்கள் அன்று கிராமத்துக்கு வருவதாகவும் எழுதிவிட்டு, 'உனக்கு ஒரு பெரிய சர்ப்ரைஸ் சேதி வைத் திருக்கிறேன். நான் நேரில் வந்து சொல்லும்வரை யோசித்துக் கொண்டிரு' என்றும் எழுதி லெட்டரை முடித்திருந்தான்.

அது என்ன சர்ப்ரைஸ்?

புஷ்பாவுக்கு ஆர்வம் எழுந்தது.

பதவிப் பிரமோஷன் போன மாதம்தான் கொடுத்திருக் கிறார்கள். அதனால் அது இல்லை.

மாற்றல்...? ம்ஹூம், அதற்கு வழியே இல்லை.

புடவை ஏதாவது வாங்கிக்கொண்டு வருவாரோ?

பெரிய சர்ப்ரைஸ் என்றால் என்ன?

புஷ்பாவின் ஆர்வம் அதிகரித்து மனசு குறுகுறுத்தது.

**தோ**ட்டத்தில் இறங்கின ஷண்முகமும் முருகனும் வேகமாய் ஓடி மாட்டுக்கொட்டிலைத் தாண்டி, மல்லிகைப் புதர்களைத் தாண்டி, ஒரு பக்கமாய் மாமரத்து நிழலில் இருந்த கோழி வீட்டை அடைந்து மூச்சிரைக்க நின்றார்கள்.

நல்ல உச்சி வேளை. கோழிகள் தீனி எடுக்கப் போயிருந்தன போலும். கண்ணில் ஒன்றைக்கூடக் காணவில்லை.

தரையிலிருந்து ஒரு அடி உயரத்தில் வலையினால் ஆன அந்தக் கோழி வீடு இருந்தது.

கிட்டத்தட்ட இருபது கோழிகள் இருந்ததால், விசாலமான அந்த வலைக்கூண்டின் ஒரு பக்கத்தில் தண்ணீர் ஜாடியை அடுத்து பெரிய பானை ஒன்றை சற்றே சாய்த்து வைத்திருந் தார்கள். முட்டை இடவேண்டிய கோழி அந்தச் சமயத்துக்குப் பானைக்குள் ஏறி உட்காரும். முட்டை இட்ட பிறகு வெளியே வந்துவிடும்.

சாதாரணமாய் பூட்டியிருக்கும் கோழி வீட்டின் சின்னக் கதவு அன்று அஜாக்கிரதையின் காரணமாகவோ, இல்லை ஆட்கள் வயலுக்குப் போகவேண்டியிருந்த அவசரத்தில் மறந்து போன தாலோ திறந்தேயிருந்தது.

“கோழி எல்லாம் மேயப் போயிருக்குது முருகா. அதுவும் நல்லதுக்குத்தான்; இல்லேன்னா கத்தும்” என்று சொன்ன ஷண்முகம் கதவினூடே கையை விட்டு பானையை எட்ட முயற்சித்தான்.

“போன தடவை நீ எடுத்தே. இன்னிக்கு நானு, நா எடுக் கறேன்” தம்பி கெஞ்சியதால் முட்டை எடுக்க ஏதுவாய் முருகனைத் தூக்கிப் பிடித்தான் ஷண்முகம்.

உயரே இருந்த பானையின் வாய் வழியாகக் கையை விட்டு முட்டைக்காகத் துழாவினான் முருகன்.

முட்டை எட்டவில்லை.

இன்னும் சற்றே எக்கிக் கையை ஆட்டினவன், ‘ஸ்’ என்று கையை இழுத்துக்கொண்டு, “கோழி இருக்கு. கையைக் கடிக்குது...” என்றான்.

அவன் காட்டிய இடத்தில் சற்றே ரத்தம் கசிந்தது.

தம்பியின் பேச்சை நம்பி, தலையை மட்டும் கூண்டுக்குள் விட்டு எட்டிப் பானையைப் பார்த்தான் ஷண்முகம்.

பானை கறுப்பாக அசைவற்று இருந்தது.

“போடா, கோழியும் இல்லே ஒண்ணும் இல்லே! வெள்ளைக் கோழி உள்ள இருந்தா தெரியாதா? நா முட்டைய எடுக்கறேன், நீ தள்ளிக்க...” முருகன் நகர்ந்ததும் ஷண்முகம் நன்றாய் எட்டிப் பானைக்குள் கையை விட்டு இப்படியும் அப்படியும் ஆட்டினான்.

அவன் கைக்கும் முட்டை அகப்படவில்லை.

இன்னும் ஆழமாய் கையை விட்டுத் தேடினபோது அவன் கையையும் முள் குத்துவது போல ஏதோ தைத்தது.

"ஆ, ஸ்..." வலி தாங்காமல் கையை உதறிக்கொண்டான் ஷண்முகம். "ஆமாண்டா, கோழிதான் கடிக்குது! வா, அம்மா கிட்டே போய்ச் சொல்லலாம்."

இருவரும் திரும்பி உள்ளே ஓடினார்கள்.

"அம்மா...பாட்டி..." கத்திக்கொண்டே இருவரும் உள்கூடத்தில் நுழைந்து, "முட்டை எடுக்கப் போனா கோழி கொத்துது" என்று ஒரே குரலில் சொல்லும்போது வயலுக்குப் போயிருந்த தாத்தா, ஆட்கள் கரும்பும் இளநீரும் நுங்கும் தூக்கிவர உள்ளே நுழைந்தார்.

"எம்பேரன்களைக் கோழி கொத்துதா? உதைக்க வேணாம் அந்தக் கோழிங்களை?" என்று செல்லமாய்க் கொஞ்சிக்கொண்டே சின்னவன் முருகனைத் தூக்கி அணைத்தார்.

"இங்க பாரு தாத்தா..." பையன் விரலை நீட்டவும் அவர் அந்தக் காயத்தைப் பார்த்தார்.

"என் கையிலேயும் பாரு தாத்தா!" ஷண்முகமும் நீட்டினான்.

இரண்டு பிஞ்சுக் கைகளிலும் அரைவட்டமாய் இரண்டு புள்ளிக் காயங்கள். சற்றுமுன் ரத்தம் கண்டது நின்றுபோய் சின்ன விரல்கள் மெல்லிசாய் நீலம் பாயத் தொடங்கியிருந்தன.

பெரியவருக்குத் திடுக்கிட்டுப் போனது.

"கோழியா கொத்திச்சு? எங்கே காட்டு...வா..." என்றவர், "முனியா, வடிவேலு...நீங்களும் வாங்க..." என்று பணித்துவிட்டுப் பின்கட்டை நோக்கி ஓடினார்.

பெரிய கழி ஒன்றினால் கோழிக் கூண்டிலிருந்த பானையைக் கவிழ்த்தான் முனியன்.

"உடைடா..." என்று கத்தினார் தாத்தா.

முட்டைகளைத் தின்றுவிட்டு, நிழலாகப் படுத்திருந்த ஐந்தடி கருநாகம் ஒன்று தன் சுகத்தை எவனடா கெடுப்பது என்பதுபோல உடைந்த பானைச் சில்லிலிருந்து சீறிக்கொண்டு வெளியே வந்தது.

**ப**ம்பாயில் செம்பூரில் மூன்றாவது மாடியிலிருந்த ப்ளாட்டில் சீட்டி அடித்துக்கொண்டே துணிகளைப் பெட்டியில் அடுக்கிக் கொண்டிருந்தான் புருஷோத்தமன்.

*'நமக்கு மணிமணியா ரெண்டு பசங்க இருக்காங்க. இன்னும் பொண்ணு வேணும்னு அடம் பண்ணினா எப்படீங்க? காலம் இருக்குற இருப்புல ரெண்டு புள்ளைங்களை நல்ல முறையில் வளர்த்தா போதாதா? ஆபரேஷன் பண்ணிக்கிடுங்க' என்று புஷ்பா சொல்லும்போதெல்லாம், 'உம்மாதிரி பொண்ணு பெத்துக் குடு; அடுத்த வினாடி ஆபரேஷன் செய்துக்கறேன்' என்று இத்தனை வருஷங்களாய் மறுத்து வந்திருந்த நான், திடுமென்று காரணமில்லாமல் போன வாரம் வாஸக்டமி ஆபரேஷன் செய்து கொண்டு விட்டதைப் புஷ்பாவுக்குச் சொன்னால், அது அவளுக்கு எத்தனை ஆனந்தமான அதிர்ச்சியைத் தரும் என்று கற்பனை செய்து, அதனால் உண்டான குஷியை சீட்டி மூலம் வெளிப் படுத்திக்கொண்டிருந்தான் புருஷோத்தமன்.*

*– மங்கை, 1977*